ஸ்ரீ:

# ஸ்ரீகூரேச விஜயம்

ஸ்ரீகூரேச விஜயத்தில் ஆழ்வான் உபன்யஸித்த விஷயங்களை இங்கு ஸாரமாக ஸங்க்ரஹிக்கப்பட்டுள்ளது. ஸ்ரீகாஞ்சீ மஹாவித்வான் ஸ்ரீ உ. வே. ப்ர. ப. அண்ணங்கராசார்யஸ்வாமி பதிப்பித்து வெளியிடும் ஸ்ரீராமாநுஜன் பத்ரிகை 292-ல் வெளிவந்ததிது. ஸ்ரீ P. B. A. ஸ்வாமிக்கு அடியேனுடைய நன்றி உரித்தாகும்.

—ஆசிரியர்

முன்னுரை : ச்ரிய: பதியாய் அவாப்தஸமஸ்தகாமனாய் ஸ்ரீவைகுண்ட நிகேதனனாய், *பொங்கோதஞ் சூழ்ந்த புவனியும் விண்ணுலகும் அங்காதுஞ் சோராமே ஆள்கின்ற எம்பெருமான்* என்கிறபடியே உபயவிபூதி நாதனான ஸர்வேச்வரன், ஸர்வே வேதா யத்பதமாமநந்தி என்றும், வேதைச்ச ஸர்வைரஹமேவ வேத்ய: என்றும் சொல்லுகிறபடியே ஸர்வவேதப்ரதிபாத்யனாய், தேவதாஸார்வபௌமனாயெழுந்தருளியிருக்கிறபடியை ஸ்ரீபராங்குச பரகால யதிவராதிகளான நமதாழ்வாராசார்யர்கள் அமுதிலுமாற்றவினிய திவ்யஸூக்திகளாலே ராஜபாட்டையாக்கித் தாங்களநுபவித்தும் பிறர்க்கு உபதேசித்தும் போந்த நல்லடிக்காலத்திலே,

யதா யதா ஹி தர்மஸ்ய க்லாநிர்ப்பவதி பாரத! அப்யுத்தாநமதர்மஸ்ய என்று கீதாசார்யனருளிச் செய்த கட்டளையிலே தர்மக்லானி பிறக்கும் வழியிலே இந்த பரதேவதா பாரம்யத்தில் சில பாக்யஹீநர்களுக்கு விப்ரதிபத்தி உண்டாகி, "சிவாத்பரதரம் நாஸ்தி" என்றெழுத்திட்டு, அதற்குப்பல வைதிகோத்தமர்களின் இசைவைப் பெறவேண்டி,

*செங்கோலுடைய திருவரங்கச் செல்வனாருடைய கைங்கர்ய ஸாம்ராஜ்ய துரந்தரராக எழுந்தருளியிருந்து உபய வேதாந்த ப்ரவர்த்தநப்ரவீணராக விளங்கிக்கொண்டிருந்த நம் ஸ்வாமி எம்பெருமானார் ஸந்நிதியிலே ஸந்தேசம் வரவிட்டவளவிலே, *மொழியைக் கடக்கும் பெரும்புகழான் வஞ்சமுக்குறும்பாம் குழியைக்கடக்கும் நம் கூரத்தாழ்வான்*, பெரிய நம்பிகளுடனே மிக்கபெருஞ்சபை நடுவேயெழுந்தருளி, "சிவாத்பரதரம் நாஸ்தி" என்றதற்கு "த்ரோணமஸ்தி தத:பரம்" என்று கூசாதே கையெழுத்திட்டது மன்றியே, பரதேவதா பாரம்யத்தை பஹுமுகமாக உபன்யஸித்தருளி ஸ்ரீமந் நாராயணனே பராத்பரன் என்னுமிடத்தை

உபபாதித்தருளின படியை கூரேச விஜயம் என்னும் ப்ரபந்தமுகத்தாலே நம்முன்னோர்கள் மூதலித்தருளினார்கள். அதில் கண்ட ஸித்தாந்தஸ்தாபன க்ரமங்கள் எங்ஙனே? என்னில்—

பகவந்நாமத்தின் பராதான்யமும் பெருமையும் : ஸ்நாநாசமந ஸங்கல்பாதிகளில் கோவிந்தாதி திருநாமங்களே எல்லா வைதிகர்களாலும் சொல்லப்படுகையாலும், வேதமோதுகையில் ஹரிபதத்தையே (ஹரி:ஓம் என்று) தொடங்குவதாலும், பர்க்கோ தேவஸ்ய தீமஹி என்று காயத்ரியில் ஸவித்ருமண்டல மத்யவர்த்தியான நாராயணனுடைய திவ்யதேஜஸ்ஸே சிந்திக்கப்படுகையாலும், ப்ரணவார்த்தம் ஸ்ரீமந்நாராயணனே ஆகையாலும், பரமஸத்வஸமாச்ரயனான இப்பெருமானுக்கே ரக்ஷணக்ரியை அஸாதாரணமாகையாலும், இவரே ஸர்வாதிகர். "ஸர்வதேவ நமஸ்கார; கேசவம் ப்ரதிகச்சதி" என்கையாலும், "ப்ராயச்சித்தாந்யசேஷாணி" என்று தொடங்கி "க்ருஷ்ணாநுஸ்மரணம்பரம்" என்கையாலும் ஸகல வைதிக கர்மங்களுக்கும் ஸாத்குண்யப்ரதனானவிவனே பரதேவதை. ருத்ராஹுதியில் 'அப உபஸ்ப்ருச்ய' என்று அசுத்தி பரிஹாரார்த்தமாக அபாமுபஸ்பர்சநம் விதிக்கையாலும், அந்த ருத்ரன் தானும், *குறைகொண்டு நான்முகன் குண்டிகை நீர் பெய்து கறைகொண்ட கண்டத்தான் சென்னிமேலேறக் கழுவினான்* என்கிறபடியே ஸ்ரீபாததீர்த்தத்தை வஹித்துப் புனிதனானகையாலும் ஸ்ரீமந்நாராயணனே பரதேவதை.

ராமேசவர விஷயம் : சக்ரவர்த்தித்திருமகனார் சிவபூஜை செய்தார் என்னுமிடம ஸ்ரீராமாயணத்தில் சொல்லப்படாமையால் பொய்யாமித்தனை. தாமஸபுராணங்களில் சொல்லிற்று அநாதரணீயம். காசியில் ருத்ரன் ஸ்ரீராமநாமத்தைத் தாரகமந்த்ரமாகக் கொண்டு ஜபித்து உய்ந்தது ப்ரஸித்தம். ராமேச்வரமென்பதை திருவடியான ஹநுமானுடைய ரோமேச்வரமென்பர்கள், அன்றியே ஸேதுரக்ஷார்த்தமாகத் தனது சேவகர்களில் ஒருவனான ருத்ரனை நிறுத்தி நியமித்தருளினானென்னவும் குறைவில்லை. ப்ரஹ்மஹத்யாசாபத்தை போக்கி உஜ்ஜீவிப்பித்தருளினவனே பராத்பரன். *பிண்டியார் மண்டையேந்திப் பிறர்மனை திரிதந்துண்ணுமுண்டியான் சாபந்தீர்த்தவொருவனே தைவமாகவுரியவன்.

வேதத்தில் நமகசமகங்கள் சிவபரமென்கை அஸம்பத்தம். அக்நிபரமன்றோ பாஷ்யம் செய்தார்கள். "ஸர்வே வேதா யத்பதமாமநந்தி" என்றும், "வேதைச்ச ஸர்வைரஹமேவவேத்ய:" என்று

முள்ள ப்ரமாணகதிக்குச் சேராத வார்த்தைகள் கடலோசையோ டொக்கும்

கண்ணன் கைலாஸயாத்ரை சென்ற விஷயம் : கைலாஸயாத்ரையில் கண்ணனுக்கு சிவன் வரமளித்தானென்கை ஒரு நடநமாத்ரம். இதை ஆழ்வார், *கள்வா எம்மையும் ஏழுலகும் இந்திரன் வானவர் புள்ளூர்தி கழல் பணிந்தேத்துவரே* என்கிறபாசுரத்தில் அநுஸந்தித் தருளினர். "க இதி ப்ரஹ்மணோ நாம ஈசோஹம் ஸர்வதேஹிநாம், ஆவாம் தவாங்கே ஸம்பூதௌ தஸ்மாத் கேசவநாமவாந்" என்று கேசவநாமமளித்த சிவனே இதில் ஸாக்ஷி.

வராஹபுராணத்தில், "மர்த்யோ பூத்வா பவாநேவம் மாமாராதய கேசவ: மாம் பஜஸ்வ ச தேவேச! வரம் மத்தோ க்ருஹாண ச யேநாஹம் ஸர்வபூதாநாம் பூஜ்யாத் பூஜ்யதரோபவம்" "தேவ கார்யாவதாரேஷு மநுஷ்யத்வமுபேயிவான், த்வாமேவாராதயிஷ்யாமி மம த்வம் வரதோ பவ." என்கிற வரப்ரார்த்தனையையும் வரப்ரதானத்தையும் மெய்ப்பிக்க வேண்டிக் கண்ணன் சிவனை வணங்கிற்று. அவதாரத்தில் மநுஷ்யபாவனையின் மெய்ப்பாட்டுக்குச் சேர தேவதாபித்ருகுருப்ரப்ருதிகளான மனிசர்களையும் வணங்குவதில் வருவதொரு ஹாநியில்லையிறே. சிவனுடைய அபராவதாரமான அச்வத்தாமாவின் அபாண்டவாஸ்த்ரத்தினால் மாண்ட பரீக்ஷித்தைத் தன் திருவடிஸ்பர்சத்தினால் பிழைப்பூட்டிய பெருமானே பெருமானாவான்.

திருவாழியாழ்வான் நித்யம்—ஒரு தேவதையருளால் பெற்றதன்று: ஆயிரம் கமலங்களைக் கொண்டு சிவனையர்ச்சித்து பகவான் திருவாழியாழ்வானைப் பெற்றதாகச் சொல்லுமது தனனும் கல்பனை. சக்ரம் நித்யமானதென்னுமிடம் ருக் யஜுஸ் ஸாம வேதங்களில் விசதம். பாஞ்ச ஜந்யத்தின் உத்பத்திபோல் சக்ரத்தின் உத்பத்தியும் அவதார விஷயம். சூலாயுதம் பெறுவதற்காக சிவன் ஆயிரம் செண்பக மலர்களைக் கொண்டு ஸ்ரீமந்நாராயணனை ஆராதித்தனனென்றும் அதில் குறையுற்ற புஷ்பத்திற்காகத் தன் மூக்கையறிந்து ஸமர்ப்பித்து நிறைத்தனனென்றும் பகவச்சாஸ்த்ரங்களிலே சொல்லி வைத்தது. சக்ரத்தில் நின்றும் சூலமுண்டாயிற்றென்றது அகஸ்த்ய ஸம்ஹிதை. சூலத்தை யமன் செய்தானென்றும் சொல்லி வைத்தது. சிவபுரியான காசி சக்ரப் படையினால் எரிந்தொழிந்தது.

த்ரிபுரமெறித்தது : சிவன் த்ரிபுரதஹநம் செய்தானென்பதும் பகவச்சக்தி விசேஷ ப்ரயுக்தமென்ன வேதத்திலும் மஹாபாரதத்

திலும் வ்யக்தம். வேதத்திலே, "தேஷாமஸுராணாம் திஸ்ர புர ஆஸந் - ருத்ரோ வை க்ரூர: ஸோஸ்யத்விதி" என்ற விடத்திலே "விஷ்ணும் தேஜநம்" என்று ஓதிற்று. மஹாபாரதத்திலே "விஷ்ணு ராத்மா பகவதோ பவஸ்யாமித தேஜஸ: தஸ்மாத் தநுர்ஜ்யாஸம் ஸ்பர்சம் ஸ விஷேஹே மஹேச்வர:" என்று ஸுஸ்பஷ்டமாகச்சொல்லி வைத்தது. தைத்ரீயாரண்யகத்திலே "தஸ்யேந்த்ரோ வம்ரிரூபேண தநுர்ஜ்யாமசிநத் ஸ்வஸ்யம்....சிர உத்பிபேஷ" என்று சிவன் தலை யறுப்புண்டான் என்றது.

புருஷோததமன நாராயணன! புருஷோத்தமனென்றும் புராண புருஷோத்தமன் என்றும் ப்ரஸித்தனான ஸ்ரீமந் நாராயணன் மோஹிநீ வேஷம் பூண்டது நாடகங்களில் பெண் வேடமணியும் க்ரமத்திலே சேரும். கீதாசாரியன் "திவ்யம்ததாமி தே சக்ஷு: பச்ய மே யோகமைச்வரம்" என்று அர்ஜுனனுக்கு திவ்யசக்ஷுஸ் ஸைக் கொடுத்துக் காண்பித்தருளின விச்வரூபத்திலே பல க்ஷுத்ர க்ரிமி கீடங்களோபாதி சிவனும் ஒரு வ்யக்தியாக நின்றொழிந்தமை விவரிக்க வேண்டுவதில்லை. சிவனை உபாஸிப்பவர்களே உலகில் அதிக மாகக் காணப்படுகிறார்களென்பதும், வெள்ளி தங்கம் முதலியவை மிகவும் வருந்தியும் காணவரிதாயிருக்க மண்ணும் கல்லும் எங்கும் நிரம்பியுள்ளன என்னுபோலேயாமத்தனை

வயாஸர் திருவாககு! வேதவயாஸர், "உத்தருதய புஜமுசயதே" என்று கைதூக்கிச் சொன்னது, "வேதாத சாஸ்தரம பரம நாஸ்தி, ந தைவம் கேசவாத் பரம்" என்றிறே. வேதங்களில் பல இடங்களிலே, ருத்ரன் "அஹமேவ பசுநாமதிபதிரஸ்மி" என்றாப்போலே ஓரிடத் திலும் விஷ்ணு ஒருவர் பக்கவிலும் வரம் வேண்டினதாக ஓதிற் றில்லை. மாறாக, "அக்நிரவமோதேவாநாம விஷ்ணு பரம: என்று விஷ்ணுவின் பாரம்யத்தை (ஒப்பற்ற மேன்மையை) முக்தகண்ட மாகவும் சொல்லிற்று.

"கேநோபயேந லகுநா விஷ்ணோர்நாமஸஹஸ்ரகம் பட்யதே" என்று கேட்ட பார்வதிக்கு, "ஸ்ரீராமராம ராமேதி ரமே ராமே மநோரமே, ஸஹஸ்ரநாமததுல்யம் ராமநாம வராநநே" என்று நிர்லஜ்ஜமாக பரமார்த்தமுணர்த்திய ருத்ரன் பக்கலிலே பாரம்ய சங்கைக்கு அவகாசலேசமுமில்லை.

காரணத்வம பேசும் சருதிகள : கிம்பஹுநா? ஏகோ ஹ வை நாராயண ஆஸீத் ந ப்ரஹமோ நேசாந: நேமேதயவாபருதிவீ என்று

உபநிஷத்தில் ஸந்தேஹவிபர்யயங்களுக்கு இடமின்றியே சொல்லி வைத்தது. அவற்றின் ஸாராம்சங்களைத் திரட்டி "காணிலு முருப் பொலார் சேவிக்கினாத கீர்த்தியார், பேணிலும் வாம்தர மிடுக் கிலாத தேவர்" என்றும், "திருவில்லாத் தேவரைத் தேரேன்மின் தேவு" என்றும், "முண்டனீறன் மக்கள் வெப்புமோடியங்கியோ டிடக்கண்டு நாணி வாணனுக்கிரங்கினான் எம்மாயனே" என்றும், "சிலையினாலிலங்கை சென்ற தேவனே தேவனாவான்" என்றும் நம் ஆழ்வார்கள் அபரதருஷ்யமாக அறுதியிட்டருளினார்கள்.

இவ்வரிய பெரிய அர்த்த விசேஷங்களையெல்லாம் நம் ஸ்வாமி எம்பெருமானாருடைய திருவடி நிழலிலேயிருந்து கேட்டருளின நம் கூரத்தாழ்வான் தாழாதே சார்ங்கமுதைத்த சரமழை போலவும் கடல்வாய்ச் சென்று மேகங்கவிழ்ந்திறங்கிக் கதுவாய்ப்பட நீர் முகந்தேறி யெங்கும் குடவாய்ப்பட நின்று மழை பொழிந்தாலொப் பவும் ராஜஸபையிலே உபந்யஸித்தருளி தர்சனோத்தாரகராக எழுந் தருளியிருந்தபடி.

எம்பெருமானார் திருவடிகளே சரணம்.

கூரத்தாழ்வான் திருவடிகளே சரணம்.



# மத்தः பரதரம் நாந்யத் கிஞ்சிதஸ்தி

மத்த. பரதரம் நாந்யத கிஞ்சிதஸ்தி தநஞ்ஜய' என்று கீதோப நிஷத்தில் (7-7) கண்ணன் திருவாக்கு. "எனக்கு மேலான தத்வம் ஒன்றுமே கிடையாது அர்ஜுந!" என்று எம்பெருமான் தானே சொல்லிக்கொண்டான். கச்சி தேவப்பெருமானும் எம்பெருமானாருக் குத் தெளிவு பிறப்பிக்க "அஹமேவ பரம்ததவம" என்று திருக்கச்சி நம்பியிடம் திருவாய் மலர்ந்தருளினை ஸகலலோகங்களுககும் ஆதி காரணனும் முழுமுதற்கடவுளுமான நாரயணனே க்ருஷ்ணனுக வந்து பிறந்தவன் என்பதைப்பற்றி விவாதமே கிடையாது. "யோபரஹ மாணம விதாதி பூாவம யோவைவேதாமசச யரஹிணோதி தஸமை, தம ஹ தேவம ஆத்மபுததிபரகாசம முமுக்ஷுாவை சரணமஹம பரமதயே" என்று கடோப நிஷத்திலும் சிவேதாச்வதாரத்திலும் வேதபுருஷன் "சதுர்முகனைப் படைத்து அவனுக்கு வேதங்களைக் காட்டித்தந்த ஆதிபரம் பொருளான தேவனை முமுக்ஷுவான நான் சரணம் பற்று கிறேன்" என்று அநுஷ்டித்துக்காட்டினன். கீதோபநிஷதாசாரியன் "மாமேகம் சரணம் வ்ரஜ"—உன்பேற்றுக்கு அடியாகஎன் ஒருவனையே

---

பதிப்பாசிரியர்

**Dr. V. V. ராமாநுஜன்**

---

புகலாகப் பற்று என்று விதிக்கையால் இவனே பரமபொருள் என்பது சொல்லாமலே விளங்கும். "மாதவன் பேர் சொல்லுவதே ஓததின சுருக்கு" என்கிறபடியே ஸ்ரீமந்நாரயணனே ச்ருதிப்ரமாண ஸித்த மான பரதெய்வம், "உளன் சுடர்மிகு சுருதியுள்" என்று நம்மாழ்வாரும் அருளிச செய்தார்.

"சிவாத்பரதரம் நாஸ்தி" என்று குலோத்துங்கசோழன் ஒரு ஓலையில் எழுதி ஸ்ரீவைஷ்ணவர்களை ஒப்பமிட்டுக் கொடுக்கும்படி நிர்ப்பந்தித்து எழுத்துவாங்கியதாக வரலாறு கூறும். நான்முகனைப படைத்தவன் நாரயணன். நான்முகனும் தான்முகமாய்ச் சங்கரனைப படைத்தான். இப்படி படைககப்பட்டு "தெய்வம்" என்று நிறுத்தப் பட்டவன் பரதெயவமாக முடியாது. அரசன் கையில் உள்ள ஓலையில் மட்டுமே அவன் பரதெய்வமாக இருக்க முடியும். ஓலை மாய்ந்துவிட்டால்-கரையான் தின்றுலோ தீப்பட்டாலோ, அதிலெழு தப்பட்ட பரத்வமும் மாய்ந்துவிடுமன்றோ?

பிரமனைப்படைத்து அவன்மூலம் இவனையும் படைத்து இவர்களுக்கிடையே இவர்களுடன் ஸாம்யம் தோற்ற விஷ்ணு என்றொரு அவதாரம் எடுத்தான் பரமன் இதையே பகவானின் முதல் அவதாரம் என்பர். தான் படைத்தவருடன் ஸமமாக நின்றதால் இவன் தாழ்ந்தவனாக மாட்டான். இவன் கூடநிற்பவருக்குப் பெருமைதரும். ப்ரஹ்மம் — என்ற சொல், தானே பெரிதாய், பிறரையும் பெரிதாக்கவல்லது எதுவோ, அதைக் குறிக்கும். 'கங்குலும் பகலும்' என்ற திருவாய்மொழியில் (7 2-10) ஆழ்வார், "முவுலகாளியே! என்னும்; கடிகமழ் கொன்றைச் சடையனே! என்னும்; நான் முகக்கடவுளே! என்னும்; வடிவுடைவானோர் தலைவனே! என்னும்; வண்திருவரங்கனே! என்னும்" என்று நாயகியாய்த் தாம் பேசுவதைத் தாய்ப்பேச்சால் வெளியிடுகிறார். இறுதித் திருவாய்மொழி (10-10-1)யிலும் 'முனியே! நான்முகனே! முக்கண்ணப்பா' என்று மும்மூர்த்தி ஸாம்யம் பேசுவதுபோலப் பாசுரமிடுகிறார். முன் (7-2-10) பாசுரத்துக்கு எம்பெருமானார் நிர்வாஹம் ஈட்டில் காட்டப்பட்டுள்ளது காண்க: "இந்திரனுக்கு அந்தராத்மாவாய் இருந்து அவனுடைய அதிகாரத்தைச் செலுத்துமவனே! ருத்ரனுக்கு ஆத்மவாய் அவனுடைய பதத்தை நடத்துமவனே! சதுர்முகனுக்கு அந்தர்யாமியாய் ச்ருஷ்டிவ்யாபாரத்தை நடத்துமவனே! நித்யஸூரிகள் தலைவனே! என்னை ஆளவந்த ஸ்ரீ ரங்கநாதனே!" என்று ஸ்ரீரங்கநாதனே எல்லாருமாக உள்ளதைப்பேசுவதாக பொருள் காட்டப்பட்டுள்ளது. சேதன நலனை எப்போதும் மனனம் பண்ணும் முனியான பரமபுருஷனே நான்முகனுக்கும் முக்கண்ணப்பனுக்கும் உயிராக உளன். "நீராய் நிலனாய்த் தீயாய்க் காலாய் நெடுவானாய், சீரார்சுடர்கள் இரண்டாய்ச் சிவனாய் அயனாய்!" (திருவாய்-6-9 1) என்று பேசுகையில் பஞ்சபூதங்களான நீர், நிலம், தீ, கால் (காற்று), வானம் இவைகளுடன் ஸூர்யசந்த்ரகளான இருசுடர்கள், சிவன் அயன் எல்லாவற்றையும் (சேதன அசேதன வாசியில்லாமல்) எம்பெருமானுடன் ஒக்கப்பேசியிருப்பதைக் காண்க. எல்லாம் அவன் விபூதி என்றபடி. ச்ருதியும், "ஸப்ரஹ்மா, ஸசிவஸ் ஸேந்த்ர: ஸோக்ஷர: பரமஸ்வராட்" என்று ஓதிற்று, ஆழ்வாரும், "அவனே அவனும் அவனும் அவனும் அவனே மற்றெல்லாமும் (திருவாய் 9-3-2)" என்று இதை மொழிபெயர்த்தார். "ஒத்தாரும் மிக்காரும் இலையாய மாமாயா! ஒத்தாய் எப்பொருட்கும் உயிராய்" (2-3-2) என்கிறபடி தனக்கு ஒத்தவரும் உயர்ந்தவரும் யாருமில்லாத எம்பெருமான், எல்லாப்பொருள்களுக்கும் உயிராய் அவைகளின் ஸத்தையை (உள்ளமையை)

நோக்கியிரா நின்றுன். வேதங்களிலோ, தமிழமறையான திருவாய் மொழியிலோ மும்மூர்த்தி ஸாம்யம் சொல்லுவதாகச் சொல்லவே முடியாது. சொல்வது மிகவும் தவறு—மஹாபாபமும் கூட.

மிகத்தொன்மையானவை என்று போற்றப்படும் பழந்தமிழ் இலக்கண இலக்கியங்களில் வேதக்கருத்துக்கு முரண்பாடில்லாமல் நாராயணனே பரம்பொருளாகப் பேசப்பட்டுள்ளான். பின்னர் தோன்றிய சைவநூலான பெரியபுராணமும்

அஙகண முலலேயின் தெயவமெனறு அருநதமிழுரைககும
செஙகணமால

என்று செங்கண்மாலைப் பழந்தமிழக்கடவுளாகப் போற்றுகிறது.

மா அயோயே மாஅயோயே
மறுபிறபபறுககும மாசில சேவடி என்றும்,
வேதததுமறை நீ பூதததுமுதல நீ
வெஞ்சுடரொளியு நீ திஙகளுளளி நீ என்றும்,
பிறவாய பிறபபிலே பிறபபிததோரிலேயே என்றும்,

பழந்தமிழ் நூலான பரிபாடல் மாயோனை திருமாலைப் பரம் பொருளாகப் போற்றுகிறது இப்பாசுரங்களுக்கு விளக்கம் தேவை இல்லை.

"தரீணிபதா விசகரமே விஷுணு" என்று வேதம் கொண்டாடிய உலகளந்தசேவடிகளை, "இருநிலஙகடநத திருமருமாபினன்" என்று பெருமபாணாற்றுபபடையும், நீணிலமளநதோன ஆடிய குடமும்" என்று சிலப்பதிகாரமும, "மடியிலாமனனவன எய்தும அடியளநதான தா அயது எலலாம ஒருஙகு" என்று உலகப்பொதுமறை என்று குலாவப்படும திருக்குறளும பேசுவதைக் காணலாம்.

தாமவீழவார மனரேள துயிலின இனிது கொல தாமரைக் கணணுலகு" என்ற குறளில் புண்டரீகாக்ஷனை புருஷோத்தமனே விண்ணாட்டிற்குரியவன்—அவனேயடைவதே பேரின்பம் என்று திருவள்ளுவர் காட்டுகிருர். இப்படி இன்னும் பலபல சான்றுகள் காட்டக்கிடக்கின்றன. பன்னியுரைக்குங்கால் பாரதமாம்.

நம்மாழ்வார் தமது திருவாய்மொழியில் எம்பெருமானுடைய பரத்வத்தைப் பலபடியாலும முதலித்துள்ளார். ஆழ்வார் திருவாக்கு

நமக்கு ஆப்தவாக்யமானமையாலே அதில் ப்ரீதிவிச்வாஸம் அவசியம் வேணும். உயர்—திண்—அணை—ஒன்று என்ற நான்கு திருவாய்மொழிப் பதிகங்களில் பரதத்வநிர்ணயம் பண்ணப்படுகிறது. "உயர்வற உயர் நலமுடையவன் —அயர்வறுமமரர்கள் அதிபதி" என்று உத்தம கல்யாணகுணயோகனுகவும், தேவாதிதேவன்—ஸர்வஸ்வாமி என்றும் 'உளன் சுடர்மிகு சுருதியுள்' என்று ஸகலவேதப்ரதிபாத்யன் என்றும் காட்டினர். 'திண்ணன்வீடு' என்னும் பதிகத்தில் கண்ணனுகவும் ராமனுகவும் வந்து பிறந்தவனே பரமபொருள் என்றார் 'அணைவது அரவணை மேல்' என்னும் பதிகத்தில் திருவநந்தாழ்வான் மேல் பரமபதத்தில் துயில்கொள்பவனே மோக்ஷப்ரதன்-பரமாத்மா என்றும் எல்லாப் பொருட்கும் 'வேர் முதலாய்வித்தாய்' என்கிறபடி எவ்வாவிதத்திலும் காரணமாய விளங்குமவன் என்று சொல்லி,

தீர்த்தன் உலகளந்த சேவடிமேல் பூந்தாமம்
சோத்தி அவையே சிவன் முடி மேல் தானகண்டு
பார்த்தன் தெளிந்தொழிந்த பைந்துழாயான் பெருமை
பேர்த்தும் ஒருவரால் பேசக்கிடந்ததே?

என்று கேட்கிறார். பாரதயுத்தத்தில் பாசுபதாஸ்த்ரம் வேண்டிச்சிவனை பார்த்தன் (அர்ஜுனன்) ஆராதிக்கப்புக, அப்பூஜையைத் தன் திருவடிகளிலே பண்ணும்படி கண்ணன் நியமித்தபடியே செய்தான். அன்று கனவிலே சிவன் அவனுக்குக் காட்சி தந்தபோது கண்ணன் காலில் தானிட்ட புஷ்பம் சிவன் முடிமேலிருக்கக் கண்டான், சிவனிடமிருந்து கனவில் அஸ்த்ரமந்த்ரங்களைப் பெற்ற அர்ஜுனன் கண்ணனே பரம்பொருள் என்று தெளிவும் பெற்றான். இன்னுமொரு பாசுரம்:

ஏறனைப் பூவனைப் பூமகள்தன்னை
வேறின்றி விண்தொழத் தன்னுள்வைத்து
மேல்தன்னை மீதிடநிமிர்ந்து மண்கொண்ட
மால்தனில் மிகுமோர் தேவுமுளதே?

திருமாலைமிக்கும் ஓர் தேவன் இல்லை. 'வெள்ளேறன் நான்முகன் இந்திரன் வானவர்புள்ளூர்தி கழல் பணிந்து ஏத்துவரே" என்கிற படியே எல்லாதேவர்களும் வந்துபணியும்படி வேதமயனுன கருடனை வாகனமாகக் கொண்டவன் இவன். இவன் எதிரில்

தான் ரிஷபவாகனன் என்று இறுமாந்திருப்பனும் சிவன்; "ஒரு எருதைத் தேடிக்கொண்டு கைக்கொளாண்டி களைபபோலே இறுமாந் திருக்கும்" என்று ஈட்டில் ஸ்ரீஸூக்தி காண்க [கைக்கொளாண்டி —எருதாண்டி மாட்டுக்காரன்] நான்முகனே தான் பூவன்—பூவில் பிறந்தவனாகையால் (பிறரைப்போல்) பிறவாதவன் என்று இறுமாந் திருக்கும். அந்யபரரான இருவருக்கும், அநந்யபரையான (ஸர்வேச் வரனைத் தவிர்த்து வேறறியாத) பிராட்டிக்கும் ஒக்கத்தன் திருமேனி யில் இடமளிக்கும் பெரியோனை திருமாலை மிக்கும் தேவனும் உளனோ? இல்லை என்பது கருத்து.

தர்மபுத்ரர் ராஜஸூயயாகம் பண்ணியபோது "கண்ணன பரம புருஷன; சிருதிஸித்தமான கண்ணழகுடைய புண்டரீகாக்ஷன். அவனுககே அக்ரபூஜை பண்ணவேணடும்" என்று நெடுமபோது க்ருஷ்ணனுடைய பரதவத்தை பீஷ்மர் உபபாதித்தார் அதே ஸபையில், ஸஹதேவன் தேவதாநத்ரஙகள் பக்கல் சரக்கறுத்து ; கண்ணனே பரமாத்மா; அவனுககே அகரபூஜை பண்ணவேண்டும். இதை இசையாதவன் தலையில் என் காலைவைக்கிறேன்" என்றபோது அவன தலையில் புஷப மழை பொழிநதது. ஞானியான பீஷ்மர் வாக்குக் கிடைக்காத மதிப்பு ஸகதேவ ன வாககுக்கு உணடா னது அத்யவஸாய பலமே காரணத்தால்.

'ஒன்றும் தேவும்' திருவாயமொழியில் அர்ச்சசையில் பரத்வம் பேசப்படுகிறது. ஒனறுநதேவும உலகும உயிரும மறறும யாதுமிலலா அனறு நானமுகன தனனோடு தேவருலகோடு உயிா படைததான—திருக குருகூரதனுள நினற ஆதிபபிரான நிறக மறறைத தெயவம நாடுதிரே!' இது என்ன அறிவீனம் எனகிறார் ஆழவார் *நாடிநீாவணஙகும தெய்வமும், உமமையும முனபடைததான -வீடில சீாபுகழ அதிபிரான்* என்று இதர தேவதைகளையும, அவற்றைத்தொழும உம்மையும் படைத்தவன ஆதிப்பிரானை திருமால் எனறும் காட்டுகிறார். பேச நினற இவனுக்கும பிரமன தனககும பிறாககும நாயகன அவனே-கபால நனமோககததுக் கண்டு கொணமின* என்று நமக்குத் தெளிவு பிறப் பிக்கிறார். இங்கு ஈடு அற்புதமாக விளக்குகிறது—"நீங்கள் ஈச்வரர் களாக சங்கித்தவர்கள் இருவரும் நினற நிலைகண்டதே: ஒருவன (பிரமன்) தலைகெட்டு (தன மகளை ருத்ரனால் தலை அறுப்புண்டு தலையை இழந்து) நின்றான் — பிரமனுக்கு முதலில் 5 தலைகள் இருந்த தாகவும் அதில் ஒன்றை ருத்ரன் கொயததாகவும் அந்த கபாலம் கையிலிருந்து விழாமல் ஒட்டிக்கொண்டதால் 'கபாலி" என்று பிட்சை புகுவானான் என்று வரலாறு) ஒருவன் ஓடு கொண்டு ப்ராயச் சித்தியாய நின்றான் [கையில் நின்றகபாலம விலகவில்லை

வெகுகாலம் சென்றபின் நாரயணனருளால் நீங்கிற்று.] ஓட்டை ஓடத்தோடு ஒழுகலோடமாய் உங்கள் குறை தீரப்பற்றுகிற நீங்கள் உங்களில் பெருங்குறையாளரையோ பற்றுவது? "பாதகியாய் பிக்ஷை புக்குத்திரிந்தான்'' என்று நீங்களே சொல்லிவைத்து, அவனுக்குப் பரத்வத்தைச் சொல்லவோ? ஒருவனுடைய (பிரமனுடைய) ஈச்வரத்வம் அவன் தலையோடே போயிற்று; மற்றவனுடைய (சிவனுடைய) ஈச்வரத்வம் அவன் கையோடே'' என்று.

எம்பெருமானையொழிந்த இதர தேவதைகள் நம்மைப்போன்ற ஜீவகர்களே; பிறப்பிறப்புக்குட்பட்ட கர்மவச்யர்கள்; தமது பூர்வ ஜன்மஸுக்ருதத்தால் நீண்டவாழ்வும் 'தேவதை' என்ற நிலையும் எம்பெருமானருளால் பெற்றவர். ஈடு 1-1-5ல் காட்டப்பட்டபடி, 'ஐயன் பாழியில் ஆனை போர்க்கு உரித்தாமன்றாயிற்று அவ்வோ தேவதா மாத்ரங்களுக்கு பலப்ரதான சக்தியுள்ளது.' ஐயனார் (க்ராம தேவதை) ஆலயத்தில் பெரிதாக நிறுத்தப்பட்டிருக்கும் மண்யானை குதிரைகள் என்று அரசனுக்கு போர்ப்படையில் உதவுமோ அன்று தான் இந்த தேவதைகள் தாமே ஒருபலனைத்தர வல்லமையுள்ளவையாயிருக்கும்.

"'ஒன்றும் தேவும்'' ப்ரவேசத்தில் [ஈடு 36000] எம்பார் வார்த்தை: "ஸகல வேத சாஸ்த்ரங்களையும் அதிகரித்துவைத்து, ''பரதத்வம் இன்னது'' என்று அறுதியிடமாட்டாதே கண்டவிடமெங்கும் புக்குத்தலை சாய்த்ததுத் தடுமாறித் திரியா நிற்க, எம்பெருமானார் தர்சநஸ்தரில் எத்தனையேனும் கல்வியறிவில்லாத ஸ்த்ரீ ப்ராயரும் தேவதாந்ரங்களை அடுப்பிடுகல் லோபாதியாக நினைத்திருக்கிறது—இவ்வொன்றும் தேவும் இப்பக்ஷத்திலே உண்டாகையிறே'' இங்கு நம்பிள்ளையின் ஸாரமான அருள்மொழி—''ஸம்ஸாரியாயிருக்கைக்கு மூலம் இதரதேவதைகள் பக்கம் ப்ராவண்யமும், பகவத் பரத்வஜ்ஞானமில்லாமையுமாய் இருந்தது. அதற்கு உறுப்பாக பகவத்பரத்வஜ்ஞானத்தை (ஆழ்வார்) உபதேசிக்கிறார்'' என்பதே. இத்திருவாய் மொழியிலநுபவத்தால் நாடடங்கத் திருந்திப் பரம் பொருளான திருமாலுக்கு ஆட்பட்டமைகண்டு மேலே ''பொலிக பொலிக'' என்று பாகவதமங்களாசாஸனப் பாடல்கள் பிறந்துள்ளன.

முன்புகாட்டிய எம்பார் வார்த்தையைச் சிறிது விளக்குவோம். எல்லா சாஸ்த்ரங்களையும் கற்றிருந்தாலும் பரம்பொருள் இன்னது என்று ஒரு முடிவுக்கு வரத்துணியாமல் கண்டகண்ட தெய்வங்களின்

காலங்களில் விழுந்து பலர் ஸம்ஸாரிகளாய் நிற்கிறார்கள். எம்பெருமானார் தர்சனத்தைச் சேர்ந்தவர்கள் சிறிதளவும் சாஸ்த்ர ஞானம் இல்லாதவர்களாயினும் "ஸ்ரீமந்நாராயணனே பரம்பொருள்' என்று துணிந்து மற்ற தெய்வங்களை அடுப்பிடுகல்லாக (அடுப்பு அமைக்கும் கல்லுக்குச்சமமாக) எண்ணியிருப்பர். இதற்குக்காரணம் பரமகாருணிகரான நம்மாழ்வார் ஒன்றும் தேவும என்ற திருவாய் மொழிப்பதிகம நம்பொருட்டு அருளிச்செய்துள்ளமையே.

நம்மாழ்வாரான மாறனும், மாறனடிபணிந்துய்ந்தவரான நம்மி ராமனுசனும் நமக்குப் பரமாசார்யர்கள். இவர்கள் திருவாக்கே நமக்கு உயர்ந்த ப்ராமணம். ஆசார்யன் திருவாக்குக்கு மேற்பட்ட ப்ரமணம் எதுவுமே வேண்டாம். சாஸ்த்ர ஆராய்ச்சியே தேவை இல்லை. இத்துணிவு ஒவ்வொரு ஸ்ரீவைஷ்ணவனுக்கும் ஏற்படவேண்டும். த்ரிபுராதேவியார் என்பவர் அகளங்கப்ரம்மராயன் என்னும் அரசனின் மனைவி. எம்பெருமானாரிடம் பரமவிச்வாஸமுள்ள இந்த ராஜபத்நியை ஒருவர், "ப்ரமாணப்ராப்லயத்தாலேயோ எம்பெருமானே ஆச்ரயணீயன் என்று நீங்கள்பற்றிற்று?" என்று கேட்க, ராஜமஹிஷியின் பதில்: "அது ஒன்றுமன்று; எம்பெருமானார் காடிச்சால் மூலையில் தேவதையை ஆச்ரயித்தாராகில் அதுவே எங்களுக்கும் ஆச்ரயணீய வஸ்துவாகக் கடவது" என்றாராம் காடிச்சால்மூலை என்பது பழையசோற்றைப் பானையில் இட்டுவைக்கும் ஈசானிய (வடகிழக்கு) மூலையை. ஈசானியமூலை என்னக்கூடாமல் கூசி, காடிச்சால்மூலை என்பது காண்க. இங்கு ஸாரமாக நோக்கவேண்டுவது-எம்பெருமானார் எதைப் பரதெய்வம் என்கிறாரோ அதுவே நமக்கு ஆச்ரணீயவஸ்துவாகக் கடவது என்னும் ஆழ்ந்த நம்பிக்கை. "சுருதி சிரஸிவிதிபதே பரஹமணி ஸ்ரீநிவாஸே பவது மமபரஸமிந சேமுஷி பகதி ரூபா" என்று ஸ்ரீபாஷ்யத்தின்ஆரம்பத்தில் பகவத் ராமாநுஜரின் திருவாக்கை நாம் எப்போதும் ஸ்மரித்துக் கொண்டிருக்கவேணும். த்ரிபுராதேவியாரின் வாக்கு அருளிச்செயல் வயாக்யானங்களில் பல இடங்களில் குறிப்பிடப்பட்டுள்ளது.

இனி, எமபெருமானாரின் ஆசாரத்தை விளக்கும் ஒரு நிகழ்ச்சியையும் விவரிபபோம். இது 10-2-1 பாசுர ஈட்டின் அரும்பதத்தில் காணப்படுவது. [மறந்தும் புறம் தொழா மாந்தர்] ஒரு ஸமயம் நம்பெருமாள் திருவரங்கத்துக்கு வெளியே புறப்பாடு கண்டருளும் போது அநுயாத்ரையாய் எம்பெருமானார் எழுந்தருளினார் அச்சமயம் எதிர்பாராமல் இடியும பெருமழையுமாக வர, பெருமாள் தற்செயலாய் அருகிலிருந்த ஒரு தேவதாந்தர ஆலயத்தில் மழைக்கு

ஒதுங்க நேர்ந்தது ஆனால் ஸ்வாமி எம்பெருமானார் 'அப்பெருமழை யிலும் வீதியிலேயே நின்றிருந்தார். அருகிலுள்ளாரீர், "பெரு மாளுடன் உள்ளே எழுந்தருளலாகாதோ?'' என்ன, ஸ்வாமி. "ஸர்வேச்வரனான எம்பெருமான் எல்லா இடங்களுக்கும் உடைய வன் — ஸர்வஸ்வாமி. அவன் எங்கும் எழுந்தருளப்ராப்தி உண்டு. நாம அவனுடைமைகள ராஜாதிராஜனான அவனுக்கு மஹிஷி ஸ்தானத்திலுள்ளவர். அவன் எங்குபுகுந்தாலும் அவன் கோவில் தவிற வேறு எங்கும் புகநமக்குப்ராப்தி (தகுதி) இல்லை "பதிவிருதை யான பெண் பிறமனைபுகுந்தாள் என்றால் எவவளவு நிந்தைக்கிட மாகும்? அப்படியே இங்கும். நான் பொதுவீதியான இங்கேயே இருப் பேன்'' என்றிருந்து மழைவிட்ட பிறகு பெருமாளுடன் எழுந்தருளி னாராம்

வாஸுதேவனை விட்டுப்பிற தெய்வங்களைத் தொழுவது கொடிய பாபமாகும் வராஹபுராணத்தில் ஞானப்பிரான் (வராஹமூர்த்தி) தனது (பஞ்சமகுலத்தவனான) பரமபக்தன் நமபாடுவான் சரித் திரத்தை பூமிப்பிராட்டிக்குச் சொல்லும் வகையில் இந்த தத்வத்தை தாமே திருவாய்மலர்ந்தருளுகிறார். இந்த வரலாறு கைசிக மஹாத்ம்யம் என்ற அத்யாயத்திலுள்ளது நம்பாடுவான் தினமும் தனதிசையினால் திருக்குறுங்குடி எம்பெருமானை ஏத்திப்பாடுவதையே பொழுதுபோக்காகக் கொண்டவன். இவன் ஒரு கார்த்திகை ஏகாதசி தினத்தன்று இரவு தூங்காமல் பெருமானை பஜித்து, மறுநாள் விடி வோரையில் பெருமானைப் பாடுவதற்கென்று போகையில் ஒரு பிரம்மராக்ஷதன் இவனைக்கொன்று தின்பதற்காகக் கைப்பற்றினான் அன்று பெருமானைப் பாடாமல் மரணமடைய விரும்பாத நம்பாடு வான், பிரம்மராக்ஷஸ்ஸிடம் தான் பெருமானைப்பாடி விட்டுத் திரும்புவதாகவும் அப்போது தனனை புஜிக்கலாம் என்றும் வேண்டினான். அவனை ராக்ஷதன நம்பவில்லையாதலால் கோரமான பல சபதங்கள் செய்து, கடைசியில்

வாஸுதேவம பரிதயஜய யேநயம் தேவமுபாஸதே |
தேஷாம கதிம் பரபதயே வை யத்யஹம நாகமே புக: ||
நாராயணம தாந்யைஸ்து தேவஸ்துல்யம கரோதி ய:
தஸய பாபேந லிபயேஹம யதயஹம் நாகமே புந. ||

ஏனறு சபதமபண்ண, 'சுத்தவைஷ்ணவன இவன்'' எனறு நம்பிக்கை பிறந்து அவனைப்போக அநுமதிததனன். இந்த பாசுரங்களுக்கு ஸ்ரீபராசரபட்டர் அருளியுள்ள வ்யாக்யானம்—

''யாரொருபேர்கள் ஆச்ரித ஸுலபனுய் ஸர்வவ்யாபியான ஸ்ரீவாஸுதேவனை ஆராதனம் பண்ணுமல் இதரதேவதைகளை உபாஸிக்கிறுர்கள், அவர்களுடைய துர்க்கதியை அடையக்கடவேன் மீளவும் வதேிலேனுகில்,

''ஸர்வஸ்மாத்ரபரனுய், ஸர்வாந்தர்யாமியாய் ஸர்வகர்ம ஸமாராத்யனுய், முமுக்ஷுபாஸ்யனுய்: மோக்ஷப்ரதனுய், முக்தப்ராப்யனுன ஸர்வேச்சரனையும். *காணிலுமுருப்பொலார் செவிக்கினுத கீர்த்தியார் பேணிலும் வரந்தரமிடுக்கிலாததேவராய்* கர்மபரவசரான வ்யதிரிக்த தேவதைகளையும் ஸமமாக எண்ணுகிறுன் யாவனொருவன், அவனைப்போலே நித்யஸம்ஸாரியாகக் கடவேன் மீளவும் வந்திலேனுகில்.'' இது ப்ரம்மரக்ஷஸ் தன்பேச்சை விச்வஸிக்கும்படி நம்பாடுவான் பண்ணிய சபதப்ரகாரம்.

இதனுல் வாஸுதேவனுன எம்பெருமானைத் தவிர்த்து இதர தேவதைகளைத் தொழுவதும், ஒப்பாரும் மிக்காருமில்லாதவனும் எல்லாவிதமான கர்மாங்களாலும் பூசிக்கப்படுமவனும், எல்லா பூசைகளுக்கும் பலனளிப்பவனும், மோக்ஷப்ரதனுயுமுள்ள ஸ்ரீமந் நாராயணனை இதர தெய்வங்களோடு ஒக்க எண்ணுவதும் தாழ்ந்தவைகளான அத்தெய்வங்களைத் தொழுவதும் மிகக் கொடியபாபம் என்று ஞானப்பிரான் திவருாக்னுகிலஃதெளியலாம்.

'அஹமேவ பரம் தத்வம்' என்று தேவப்பெருமாள்—அமரர்கள் அதிபதி—உடையவருக்கு அருளிச் செய்தான். அதுவே உண்மை. ''வேதாத் சாஸ்த்ரம்பரம் நாஸ்திதைவம் கேசவாத்பரம்'' என்று வ்யாஸ பகவான் திருவாக்கு. ''கண்ணலல்லால் தெய்வமில்லை'' என்று நம்மாழ்வாரருளிச் செயல். புருஷோத்தமனுன ஸ்ரீமந்நாராயணனுக்கன்றி மற்ற எந்த தெய்வத்துக்கும் நம்மைச் சேஷமாக (உரியதாக) எண்ணுவதோ, செயற்படுவதோ கூடாது; மஹாபாபமுமாகும் என்று ஒவ்வொரு ஸ்ரீவைஷ்ணவனும் உணர வேணும். இது நமக்கு இன்றியமையாததொன்று. தேவதாந்தர பஜனம் நமக்கு அப்ராப்தம்—தகாது என்றதால் கொடியபாபமாகிறது. இந்ததேவதைகளும் ஈச்வரவிபூதியில் சேர்ந்தவைகளாதலால் த்வேஷத்துக்கு இடமில்லை.

மத்த:பரதாம் நாந்யத் கிஞ்சிதஸ்தி என்ற கண்ணன் திருவாக்கில் ஆழ்ந்த விச்வாஸத்துடன் நமது செயல்கள் அமைய ஸ்ரீ பார்த்தஸாரதிப் பெருமான் அருள் புரியவேண்டும். ★

# பிழை திருத்தம்

கீழ்க்கண்ட இடங்களில் பாடங்களைச் சரிசெய்து கொள்ளவும். திருத்திய பாடங்கள் கீழே காட்டப்படுகின்றன.

| பக்கம் | ச்லோகம் | |
|---|---|---|
| 3 | 2 | முதலடி श्रीरङ्गेशपुरोहितः |
| | | இரண்டாமடி—सुतः श्रीमान्; मेऽस्तु |
| | 3 | இரண்டாமடி—யதுக்தயஸ்த்ரயீ |
| | | यदुक्तयस्त्रयी |
| 4 | 1 | முதலடி—ஸ்தாபிராதிதத்வாத் |
| | 1 | ,, —स्थापिताराधितत्वात् |
| | 1 | இரண்டாமடி—शौरेः |
| | | அடிக்குறிப்பு 1—पाठान्तरम् |
| | | 2—पाठान्तरम् |
| 5 | 4 | முதலடி—புஜஸ்தம்பநாத் |
| | | இரண்டாமடி—வ்ருஷவபுஷா |
| | | நாலாமடி—ஸர்வதேவப்ரக்ருஷ்ட: |
| 6 | 1 | அவதாரிகை—बोधितत्वा |
| | | மூன்றுமடி—பர்கச்சப்தஸ்ய |
| | | நாலாமடி—சுத்தஸத்த்வா |
| 7 | 1 | நாலாமடி—शुद्धसत्त्वाश्रयत्वात् |
| | 2 | மூன்றுமடி—गिरीशाहुति |
| | | நாலாமடி—विष्णुरेव |
| | 3 | அவதாரிகை முதல்வரி—विष्णुरहस्यमूर्ति दशरथ- |
| | | மூன்றும்வரி—तदाराधनादि सर्वं |
| | | समाधत्ते त्रयोदशभिः |
| | | நாலாமடி—ரக்ஷோஹத்யா |
| 8 | | அடிக்குறிப்பு 10—रक्षोहत्यापि |
| | | 11—देशेष्वादिशानेन |

பக்கம் 9, 10 அடிக்குறிப்பிலுள்ள 4அ ச்லோகத்தை ச்லோ.4க்கும் 5க்கும் நடுவில் படிக்கவும்.

| | | |
|---|---|---|
| 9 | 6 | நாலாமடி—ஸநதாரிததவாத |
| | 7 | மூனறாமடி—தாத்ருக்பாதாப்ஜ |
| | | நாலாமடி—ஸயாத்யாதிகயாத, பரகருஷட; |
| 10 | 8 | அவதரிகை—முதலவரி—पूजितत्वात् |
| | | மூன்றாம்வரி—आशङ्कय पूर्वोक्तैः |
| | | முதலடி—हेमपुष्पैः |
| | | நாலாமடி—द्रुतत्वात् |
| 11 | 9 | அவதாரிகை—पुष्पेष्वासेत्यादि |
| | | முதலடி—पुष्पेष्वास |
| | 10 | மூனறாமடி—कृष्णतासूचितत्वात् |
| | 11 | நாலாமடி—விஷணுரேவ பகருஷ்ட' |
| 12 | 12 | முதலடி— ஸித்ததாத்ருக |
| | | அவதாரிகை 2ம-வரி – विष्णोः |
| 13 | 14 | நாலாமடி—सर्वदेवप्रकृष्टः |
| | 15 | இரணடாமடி—பரஹமருதராதிசு |
| | | நாலாமடி—காருடேநாரஸிமஹே |
| | | அடிக்குறிபபு – 3—अस्त्रस्याशितत्वात् |
| 14 | 16 | முதலடி—தரிபுரஹர |
| | | மூனறாமடி—பரமதநகதநாத |
| | | அடிககுறிபபு 3—இதை நீககவும |
| | | 1—वैकुण्ठादागनेन |
| 15 | 17 | அவதாரிகை—இரணடாமவரி—द्वाभ्याम् |
| | 18 | முதலடி—வககதரோபமித |
| | | இரணடாமடி—ஸமஹிதாயாம |
| | | மூனறாமடி—ஸாமஹிதாகார |
| | 19 | அவதாரிகை—ஈறறடி—विरचितारा- |
| 16 | 19 | மூனறாமடி—पटुकरण |
| | | நாலாமடி—स्थिरत्वात् |
| 17 | 22 | இரணடாமடி—कृत्यस्यानुक्त |
| | 23 | மூனறாமடி— தநமூாதநஸய |
| 18 | 24 | ,, - நேசாநேதயாதி |
| | 25 | அவதாரிகை—भुजस्तम्भनादि |
| 19 | 26 | முதலடி - भूम्याद्यंशाश्रितत्वात् |
| 20 | 27 | முதலடி—शुचित्वात् |
| | | மூனறாமடி—दक्षादिब्रह्महत्या |
| | 28 | முதலடி—சுகவபுஷா ஸவபுஷாவாத் |